REGD. No. TN/MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 * 4 பக்கம் விலை 30 காசு



மெய்மை

எத்தனைக்குழப்பம்நேர்ந்தாலும் பொய்மை மறைந்து விடும். மெய்மைமேலே உயர்ந்து நிற்கும்.

-அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்



மக்கள் நலன்

தனிமனிதனின் பண்பாட்டைக் கருதி பொதுமக்களின் நலனைக் கவனிக்காமல் இருக்கக் கூடாது.

-பேரறிஞர் அண்ணா

● மலர்: 3 ● (★) சென்னை 17—11—1978 வெள்ளி (★)❋●★(❋) (❋)★●❋(★) (★)❋●★(❋) வெளியீடு 18—11—1978 சனி (❋) ● இதழ்: 32 ●

பிரதமர் பதவியிலிருந்து விலகத் தயார்:

# என்னை அழிக்க நினைப்பது ஜனதாவை அழிப்பதாகும்

பிரதமர் மொரார்ஜி பேச்சு

வார்சிநகர், (உஜ்ஜெயினி) நவ. 17-

என்னை அழிக்க முயற்சிப்பதன் மூலம் ஜனதாக்கட்சியை அழித்துவிடாதீர்கள் என்று பிரதமர் மொரார்ஜி தேசாய் கூறினார்.

ஜனதாக்கட்சியின்தேசிய மூகாம் (மாநாடு) மத்திய பிரதேசத்தில் உஜ்ஜெயினி நகரில் நடக்கிறது. இதில் பிரதமர் மொரார்ஜி தேசாய் ஒரு மணி நேரம் பேசினர்.

கட்சியில் உள்ள நண்பர்கள் ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசக்கூடாது. அப்படித் தொடர்ந்து செய்தால் நாம் அனைவருமே கவுரவத்தை இழக்கும் நிலை ஏற்படும்.

தவறு என்று ஏதாவது தெரிந்தால் அதுபற்றி விவாதிக்க வேண்டும். பத்திரிகை நிருபர்களை அழைத்து அதைச் சொல்லக்கூடாது. அப்படி சொன்னால் பரபரப்பாக பத்திரிகைகளில் வெளியிட்டுவிடுவார்கள்.

அமைச்சரவையில் தற்போதுஎந்தவிஷயத்தையும் துணிவாகதாராளமாக விவாதித்து முடிவு எடுக்கிறோம். இது போல் இதற்கு முன்பு எப்போதும் அமைச்சரவை விவாதித்ததில்லை. முடிவுகளைஎல்லாம் ஒருமனதாக எடுக்கிறோம்.

கட்சியும், அரசும் இணைந்து செயல்பட வேண்டும்: கட்சி செயல் முறைக்கே நான் அதிக முக்கியத்துவம் கொடுப்பேன். ஆனால் ஒரே கட்சி அரசுப் பொறுப்பில் பல்லாண்டு காலம் இருப்பதை நான் ஆதரிக்க மாட்டேன்.

## அரசுப்பணி

நமது அரசு நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது.

சிலர் நினைப்பதுபோல பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை 'திடீர்' என்று சரிப்படுத்தி விட முடியாது.

முந்திய அரசு பல வருடங்களாகக் செய்யாத சாதனைகளை குறுகியகாலத்தில் நமது அரசு சாதித்துள்ளது.

## விலகத் தயார்

1977 தேர்தலில் சில தலைவர்கள் தோல்வி ஏற்படுமோ என்று பயந்து போட்டியிடவே தயங்கினர். தேர்தலில் போட்டியிட்டால் தான் மக்களை அணுக முடியும். வெற்றியா தோல்வியா என்பது முக்கியமல்ல.

இணைந்து செயல்படுவோம் என்று மக்களுக்கு வாக்குறுதி கொடுத்தோம். அதன்படி 1977 மே 1-ந் தேதி எல்லாக் கட்சிகளும் இணைந்து செயல்படுகிறோம். சர்வாதிகார முறைப்படி நான் செயல்படுவதாக சிலர் கூறுகிறார்கள். அதை நிருபித்தால் நான் மன்னிப்புக் கேட்க தயாராக இருக்கிறேன்.

என்னை பிரதமராக கட்சி தான் தேர்ந்தெடுத்தது. நானகத் திணித்துக் கொள்ளவில்லை. சர்வாதிகாரச் செயல் முறையில் எனக்கு நம்பிக்கை இல்லை.

சிலர் என்னைத் தாக்கிப் பேசுகிறார்கள். என்னை அழிக்க முனைவதன் மூலம் கட்சியை அழித்து விடாதீர்கள்.

கட்சிக்குப் பயன் ஏற்படுமேயானால் பதவி விலகத் தயங்க மாட்டேன்.

இவ்வாறு பிரதமர் மொரார்ஜி தேசாய் கூறினார்.



## குறுக்கீடு

பிரதமர் பேசிக்கொண்டிருந்தபோது டெல்லி ஜனதாச் செயலாளர் ராஜ்குமார் ஜெயின் குறுக்கிட்டார். கட்சி கொள்கை அறிக்கையில் எனக்கு நம்பிக்கை இல்லை என்று நீங்கள் என்னிடம் கூறினீர்களே என்று ஜெயின் கூறினார்.

"நான் அப்படிச் சொல்லவில்லை, கட்சிக் கொள்கைகளை ஓரிரு ஆண்டில் செயல்படுத்திவிட முடியாது என்று தான் நான் கூறினேன்" என்று பிரதமர் விளக்கம் அளித்தார்.

பிரதமர் பேசிக்கொண்டிருந்தபோது "உங்கள் மகன் காந்தி தேசாய் மீதான புகாரை விசாரிக்க கமிஷன் நியமிப்பதற்குஏன் மறுக்கிறீர்கள்?" என்றும் ஜெயின் கேட்டார்.

ஆத்திரமுற்ற பிரதமர் தேசாய், "உங்கள் மனதில் சாத்தான் குடிகொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட விஷயங்களையும் நாம் எதிர் நோக்க வேண்டியுள்ளது" என்றார்.

அமைச்சர் காளிமுத்து தகவல்

# சென்னை மாநகராட்சி அபிவிருத்திப்பணி: ரூ.11கோடி ஒதுக்கீடு

சென்னை. நவ. 17-சென்னை மாநகராட்சி அபிவிருத்திப் பணிகளுக்காக ரூ. 11 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் ரூ 6 கோடியை உலகவங்கி பெருநகர் வளர்ச்சிகுழுமத்தின்மூலம் வழங்குகிறது என்று உள்ளாட்சித் துறை அமைச்சா காளிமுத்து நிருபர்களிடம் கூறினர்.

சென்னை மாநகராட்சி அபிவிருத்திப் பணிகளுக்காக ரூ.11 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் ரூ. 6 கோடியை உலக வங்கி பெருநகர் வளர்ச்சி குழுமத்தின் மூலம் வழங்குகிறது என்று உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து நிருபர்களிடம் கூறினார்.

அவர் மேலும் கூறியதாவது:

"சென்னை மாநகராட்சி வாக்காளர் பட்டியல் முடிவடையும் தருவாயில்இருக்கிறது.

அதன் பிறகு தேர்தலுக்கான தேதி அறிவிக்கப்படும். குடிசைப்பகுதி மேம்பாட்டுக்காக சென்னைப் பெருநகர வளர்ச்சிக்குழுவும் ரூபாய்6 கோடி ஒதுக்கியுள்ளது இது உலக வங்கியால் கொடுக்கப்பட்ட பணமாகும், இந்தப்பணம் குடிசைப்பகுதி மேம்பாட்டுக்காக பயன் படுத்தப்படும்.

சென்னை நகரில் 3 வகையான குடிசைப் பகுதிகள் இருக்கின்றன.

அரசு நிலத்தில் உள்ள குடிசைகள், மாநகராட்

(2-ம் பக்கம் பார்க்க)

வெள்ள நிவாரணப்பணி பற்றிய உயர்மட்டக்குழு முடிவு பற்றி

# புரட்சித்தலைவருடன் நாஞ்சிலார் ஆலோசனை

சென்னை, நவ.17. வெள்ள நிவாரணப் பணிகள் பற்றி உயர்மட்டக்குழுவில் நடந்த விவாதங்கள் - முடிவுகள் பற்றி முதல்வர் புரட்சித்தலைவருடன் தொலைபேசியில் நிதி அமைச்சர் நாஞ்சிலார் ஆலோசனை நடத்தினர்.

தமிழகத்தில்ஆறுமாவட்டங்களில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கு நிலச்சரிவால் பாதிக்கப் பட்டவர்களுக்கு தமிழக அரசு தீவிரமாக நிவாரணப் பணிகளைச் செய்து வருகிறது.

நிவாரணப் பணியாற்ற அமைச்சர்கள் உயர் அதிகாரிகள் அடங்கிய உயர் மட்டக்குழு கூட்டம் நிதி அமைச்சா நாஞ்சிலார் தலைமையில் நடந்தது. 3 மணிநேர ஆலோசனைகள் நடந்தன வெள்ளத்துயர் துடைப்பு நடவடிக்கைகளுக்காக மத்திய அரசின் உதவியை தமிழக அரசு கோருகிறது

பாதிக்கப் பட்ட இடங்களை நேரில் பார்த்து மதிப்பீடு செய்யவும், மத்தியநிதி உதவி பற்றி பரிந்துரை செய்யவும் மத்தியநிபுணர் குழுவை அனுப்பிவைக்குமாறு மத்திய அரசை கேட்டுக் கொள்ளப்பட்டது

இக்கோரிக்கைகள் கொண்ட கடிதம் ஒன்றை பிரதமருக்கு நிதிஅமைச்சா நாஞ்சிலார் எழுதியுள்ளார்

தமிழகஅரசின் தனிப் பிரதிநிதி ராசாராம் அந்தக் கடிதத்தை டெல்லிக்கு கொண்டு செல்கிறார்.

நிதி அமைச்சர் நாஞ்சிலார் வருகிற ஞாயிற்றுக்கிழமை டெல்லி செல்கிறார் பிரதமர்மொரார்ஜிதேசாய் மத்திய நிதி அமைச்சர் எச் எம் பட்டேல் ஆகியோரை நாஞ்சிலார் சந்தித்து வெள்ளநிவாரணப் பணிகளுக்கு நிதி உதவி கேட்பார்

நியூயார்க்கில் உள்ள முதல்வர் புரட்சித் தலைவருடன் நாஞ்சிலார் தொலைபேசியில் பேசினார் தலைமைச் செயலகத்தில் நடந்த உயர்மட்டக்குழு முடிவுகளை புரட்சித்தலைவரிடம் நாஞ்சிலார் தெரிவித்தார்

துயர்துடைப்புப்பணிகளை விரைவாகவும்,முனைப்பாகவும் நிறைவேற்றும் படி முதல்வர் புரட்சித்தலைவர் நாஞ்சிலாரிடம் கூறினர்





## மதுரையில் தமிழ்நாடு முஸ்லிம்லீக் செயற்குழு

சென்னை, நவ. 17- தமிழ்நாடு முஸ்லிம் லீகின் மாநில செயற்குழு வரும் 19ந் தேதி (ஞாயிறு) காலை 10 மணிக்கு டாக்டர் அபிபுல்லாபேக் தலைமையில் கூடுகிறது என்று பொதுச் செயலாளர் கே. பி.செய்குத்தம்பி கூறியுள்ளார்.

❋

## துறைமுக ஸ்டிரைக்: 14 பேர் கைது

சென்னை, நவ 17- சென்னை துறைமுகத்தில் இன்று, முதல் ஷிப்டுக்கு வரவேண்டிய 5800 ஊழியர்களில் 1800 பேர் தான் வேலைக்கு வந்தனர் ஒரு நாள் வேலை நிறுத்தத்தால் ரூ ஒன்றரை கோடி நட்டம் ஏற்படுகிறது

வேலைக்குச் சென்ற ஊழியர்களை தடுத்ததாக 14 பேர் கைது செய்யப்பட்டனர்.

## கிரிக்கெட்

இந்தியா 344

பாகிஸ்தான் 206 (5)

## தலைமைக் கழக அறிவிப்பு

நவம்பர் 25, 26ம் தேதிகளில் நடக்கவிருக்கும் வன்முறைக் கண்டன பொதுக் கூட்டங்கள் நடைபெறும் ஊர், பேச்சாளர் பட்டியல் விவரம் தலைமைக் கழகத்தின் சார்பில் நாளை (சனிக்கிழமை) வெளியிடப்படும்

❋

## டெல்லியில் பொன்னையன் குழந்தைவேலு

சென்னை, நவ 17- சர்க்கரை ஆலை, இரும்புஆலை ஆகியபிரச்சினைகள் குறித்து மத்திய அரசுடன் விவாதிக்க தமிழகஅமைச்சர்கள் பொன்னையனும் குழந்தைவேலுவும் இன்று (வெள்ளிக்கிழமை) டெல்லி போனார்கள். டெல்லியில் இன்று மாலை பிரதமரைச் சந்தித்துப் பேசுகிறார்கள்.

❋

## எஸ்.டி.எஸ்.- பா. ரா. பங்கேற்கும் விழா

சென்னை. நவ. 17- அண்ணா தொழில் நுட்ப பல்கலைக்கழகத் துணைவேந்தர் பி சிவலிங்கத்துக்கு பாராட்டு விழா சென்னை தாஜ்கோரமண்டல் ஓட்டலில் வருகிற 19ந் தேதி (ஞாயிறு) பகல் 1 மணிக்கு நடக்கிறது மத்திய மின்சார அமைச்சர் பா ராமச்சந்திரன் தலைமை தாங்குகிறார் தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ் பாராட்டிப் பேசுகிறா

விழாவுக்கான ஏற்பாடு காசிமாரி, கே சண்முகசுந்தரம், ஜி ஏ டி ஜான் பிரிட்டோ ஆகியோர் செய்து வருகிறார்கள்

தமிழுக்குத் தொண்டாற்றிய மாமன்னனுக்கு

# கழகஅரசின் காணிக்கை

## தஞ்சை ராஜராஜன் சிலையை சுற்றி அலங்கார மண்டபம்



தஞ்சை, நவ. 17- தமிழுக்குத் தொண்டாற்றிய பேரரசன் ராஜராஜசோழனுக்கு காணிக்கை செலுத்தும் விதத்தில் தமிழக அரசு தஞ்சையில் உள்ள ராஜராஜசோழன் சிலையைச்சுற்றி அலங்காரமண்டபம் கட்டுகிறது. இந்த தகவலை அமைச்சர் சவுந்தரராசன் தெரிவித்தார்.

தஞ்சையில் ராஜராஜ சோழன் பிறந்த நாள் விழா மிகச்சிறப்பாக கொண்டாடப்பட்டது. விழாவின்இரண்டாம் நாள் நிகழ்ச்சிக்கு குன்றக்குடி அடிகளார் தலைமை தாங்கினர், அவர்பேசியதாவது:

தமிழுக்கு "பெருந் தொண்டாற்றிய ராஜ ராஜசோழன் தமிழ்ப்பண்பாட்டையும், கலையையும் வெளிப்படுத்தும் விதத்தில் உலகினர் வியந்து பாராட்டுமளவுக்கு தஞ்சையில் பெரிய கோவிலை நிர்மாணித்தான். இன்றைக்கு மக்கள் மத்தியில் எவ்வளவு செல்வாக்கினைப் பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் திகழ்கிறாரோ அந்த அளவுக்கு அந்தக் காலத்தில் ராஜராஜன் திகழ்ந்தான்.

அத்தனை புகழுக்குச் சொந்தக்காரனான ராஜராஜன் சிலை இன்று கூரைக் கொட்டகையின் கீழே நிறுவப்பட்டிருப்பது வேதனைக் குரியதாகும்.

தமிழ்நாட்டில் முதல் முதல் தாய் சேய் நல விடுதியை அமைத்த பெருமைக் குரியவர் ராஜராஜனின் தமக்கையான குந்தவை பிராட்டியார். அந்த வகையில் இவ்விழாவில் மக்கள் நல்வாழ்வு அமைச்சர் சவுந்தரராசன் கலந்து கொள்வதுகாலப் பொருத்தமாகும்.

இவ்வாறு குன்றக்குடி அடிகளார் கூறினர்

## அமைச்சர் சவுந்தரராசன்

விழாவில் அமைச்சர் சவுந்தரராசன் பேசியதாவது-

"ராஜராஜசோழன்சிலை கூரையின் கீழே இருப்பது குறித்து குன்றக்குடி அடிகளார் வேதனையுடன் குறிப்பிட்டார் அவரது வேதனையை மட்டுமல்லாமல் நாட்டு மக்கள் அனைவரின் உள்ளக் குமுறலையும் தீர்ப்பதில் முதல்வர் புரட்சித் தலைவர் தீவிரஆர்வம்காட்டிசெயல் படுகிறார்கள்

அலங்கார மண்டபம் கட்டி அதன் உச்சியில் பெரிய கோவில் அமைப்பின் மாதிரியை நிறுவி அதன் கீழ ராஜராஜ சோழன் சிலையை நிறுவ முதல்வர் புரட்சித்தலைவர் திட்டமிட்டுள்ளார்.

செய்தி சுற்றுலா அறநிலையத் துறை அமைச்சா ஆர். எம் வீ சாரபில்இந்த அறிவிப்பை நான் வெளியிடுகிறேன் விரைவில்ராஜராஜன் சிலையைச் சுற்றி அலங்காரமண்டபம் எழுப்பப் படும்

தஞ்சையில்உள்ள ராஜா மிராசுதார் மருத்துவமனையில் இருக்கும் மகப்பேறு மருத்துவமனை இனிமேல குந்தவைதேவி மகப்பேறு மருத்துவ மனை பிரிவு என அழைக்கப்படும்

இவ்வாறு அமைச்சர் சவுந்தராசன் கூறினா

விழாவில் தெ பொ மீனாட்சி சுந்தரம், அ ச ஞானசம்பந்தம், பாரேதி ஆகியோர் இறப்புரையாற்றினர்கள்.

அந்தமான்-மதுரைக்கு

## விமான வசதி: மாயத்தேவர் கோரிக்கை

புதுடெல்லி நவ. 17- அந்தமான் தீவில் உள்ள தமிழர்கள் தமிழகத்துக்கு வந்து போக மிகவும் சிரமப்படுகிறார்கள். கப்பலில் வரவேண்டுமானால் 7 நாட்கள் பிடிக்கிறது. எனவே அந்தமான் தீவிலிருந்து சென்னைக்கும் மதுரைக்கும் "விமான சர்வீஸ்" விடவேண்டும் என்ற கோரிக்கையை விமான போக்குவரத்து மந்திரி புருஷோத்தம் கவுசிக்கிடம் கழக எம். பி. மாயத்தேவர் விடுத்தார்.

இந்தக் கோரிக்கையை பரிசீலித்து ஆவன செய்வதாக மாயத்தேவரிடம் கவுசிக் தெரிவித்தார்.

## விமான விபத்து: அமைச்சர் ராஜாமுகமது அனுதாபம்

சென்னை, நவ 17- ஹஜ் யாத்திரை சென்றவாகள் பயணம் செய்த விமானம் கொழும்பு அருகே விபத்துக்குள்ளாகி பலர் இறந்தனர் அல்லவா? அமைச்சர் ராஜாமுகமது இலங்கை போக்குவரத்து பக்ப்போக்குவரத்துறை அமைச்சர் எம் எச்முகமதுவுடன்தொடர்பு கொண்டு தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்தார்

வார மலர்
4ம் பக்கம்

# கல்லும் மலரும்...

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

முடியவில்லை.

தன் தந்தை தலை உருண்டதை நினைத்துக்கொண்டே செங்கோடனை மீண்டும் மீண்டும் குத்தினன்.

வரப்பில் உடலைச் சாத்தினன்.

கத்தியை சற்றுத் தூரத்தே உள்ள கம்பங் கொல்லைக்குள் விசிறி விட்டு பக்கத்துத் தோட்டத்தில் உள்ளகிணற்றில் கை கால் கழுவி முடித்தான்.

"வையாபுரி திருவிழாவுக்கு வந்ததும்- ஓடியாந்து தகவல் சொல்றேன். ரெடியா இருங்கன்னு சொல்லிட்டுப்போன செங்கோடன் பயலை இன்னும் காணுமே... எங்கேயோ படுத்துத் தூங்கிட்டுக் கிடப்பான்... குடிகாரப்பயல்"

வையாபுரியைப் பிடிக்க வந்த போலீஸ் அதிகாரிகள் இருவர், சற்றுத் தொலைவில் பேசிக் கொண்டிருந்தது வையாபுரிகாதில் விழுந்தது.

அரவமின்றி மற்றொரு பக்கமாக ஓடினன்.

காரியம் முடிந்த திருப்தியில் நடை போட்டான்.

கொஞ்சதூரம் சென்றதும், அவனது நினைவலைகள் பின்னேக்கி திருவிழாக் கூட்டத்தை வட்டமிட்டது.

ஆகா... அந்த "கும்... கும்"...

-அப்போதும் அவனுக்கு அதில் ஒரு லயிப்பு.

அசட்டுத் துணிச்சலுடன் அதே இடத்துக்குச் சென்றன்.

பதட்டத்துடன் அவளை உற்றுப் பார்த்து 'ஜாடை' காட்டினன்.

புரிந்து கொண்டவள் கும்பலிலிருந்து வெளியேறி வந்தாள்.

அவள் பக்கமாக வையாபுரியும் அந்த இருட்டுக்குள் வயக்காட்டுப் பக்கமாக நடந்தான்.

"ஒம்பேரு என்னடுள்ள...?"

"அய்ய ஒண்ணும் கேக்கலே.,. ஒரே மாளமும் கிளமுமா..இன்னு கேட்டே?"

"ஒம்பேரக்கேட்டேன்"

"தோ... அதுக்கு இப்பிடியா கத்தறது. எம்பேரு பாவாயி. ஒம்பேரு?"

"வை... வைத்திலிங்கம்"

"அப்படியா?..."

"உனக்கு இந்தஊரா?"

"இல்லே... அசலூரு. பக்கத்திலே இருக்கிற மருதங்குளம். சின்னயிவூட்டுக்கு திருவிழா விருந்துக்கு வந்திருக்கேன்"

"ஊட்டுக்காரருஎங்கே?"

"ஊட்லதான்"

"அடேயப்பா 2 பர்லாங் வந்துட்டமில்லியா" என்று கூறிக்கொண்டே உட்கார்ந்தான் வையாபுரி.

"ஆமாம்..ஏன் நின்னுகிட்டிருக்கே... உட்காரு"

அவன் இப்படிப் பேசினலும் அவளுக்கு அச்சம் போகவில்லை.

மீண்டும் எழுந்து அவள் கையைப் பிடித்து... "தோ..உட்காருபுள்ளே.. இந்நேரத்துல யாரு இங்கே வரப்போறுங்க?" என்று இழுத்து அமர்த்தினன்.

அவன் கைபட்டதும் பாவாயி உடல் சிலிர்த்து விட்டது.

அப்படியே அவளை அள்ளி கட்டிக்கொண்டான்.

"அய்யோ" என்று அவள் ஆசையிலும், அச்சத்திலும் தணறினுள்.

"என்ன இது உங்க உடம்பெல்லாம் பிசு பிசுன்னு"...

'ஒண்ணுமில்லே..ஒண்ணுமில்லே ... திருவிழாவிலே ஆடு வெட்டினேனில்லே... அந்த ரத்தம்... இப்படியே விடியறவரைக்கும் இங்கேயே இருந்துக்குவமா".

அவன் ஆசையை எல்லாம் கொட்டி அவளை அணைத்துக் கொண்டான்.

ஒரேஉல்லாச சல்லாபம்: பின்னிப் பிணைந்தபடி நேரம் போய்க் கொண்டே இருந்தது.

தூரத்தில் 'டார்ச்' விளக்குகள் தெரிவதை முதலில்பார்த்தது பாவாயி தான்.

"என்னுங்க அது"

"யாரோ காட்டுச்குப் போறுங்க... அவ்வளோவ் தான்"

"அதுக்கு இத்தனபேரா பேட்ரிலாம்பு புடிச்சுக்கிட்டு வருவாங்க"

-அவள் குழந்தைத்தனமாகக் கேட்டாள். புதிதாக கொலைநடந்ததை அறிந்து போலீஸ் வலைபோட்டு வையாபுரியை துழாவிக் கொண்டிருப்பது அவளுக்கெங்கே தெரியும்?

"இந்தா இத கையிலே வெச்சுக்க"

"என்னது?"

"ஒண்ணுமில்லே... ருவா..."

"சீ... நல்ல ஆளய்யா நீ... உம்மனசிலே என்ன மநனச்சுக்கிட்டே?"

"சத்தியமா ஒன்னைப் பத்தி அப்படி நெனைக்கலே. எங்கிட்டே வீணு இந்தப் பணம் இருக்குது. ஊரெல்லாம் தேடிக்கிட்டிருக்கிற வையாபுரி நாந்தான். இந்தப் பணத்தினுல் எனக்கு இனி பிரயோசனம் இருக்காது. திருவிழாவுல இஷ்டப்பட்டதவாங்கிக்க...போலீஸ் என்ன தேடிவந்துகிட்டிருக்கு. நீ அந்தப்பக்கமாபோயிடு. நான் நேரா இப்படியே ஓடிடறேன். போலீஸ்லமாட்டிக்காம இருநதா... அடையாளம் தெரியாத மாதிரி ஒங்க ஊருக்கு வாறேன். இன்னும் நான் இங்கே இருந்தா ஆபத்து..

பேசிக்கொண்டே வையாபுரி திரும்பிஓடவும், எதிரில் 'திடீர்' என்று ஏழெட்டு டார்ச்விளக்குகள் அவன் முன்ஒளிநாக்குகளை நீட்டியபடி நிற்கவும் சரியாக இருந்தது.

(தொடரும்)

# நாடகமேடை அனுபவங்கள்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

துவக்கக் காட்சியில் பெண் ஒருத்தியை பிணம் போல் பெட்டியில் தூக்கி வைக்க வைக்க வேண்டும்.

"நீ தான் நடிக்கப்போகிறுய்..." என்று கோபி கூறினர்.

"பெண்வேடம் போடத் தயார்... ஆனுல் மீசையை மட்டும் எடுக்கமாட்டேன்" என்று கூறினேன்.

"மீசையை வைத்துக் கொண்டு எப்படி பெண் வேடம் போடப் போகிறுய்?" என்றார் கோபி.

"பெரிய வேடம்..ஒன்றுமில்லை...பிணம் போல் நடிக்கும் வேடம்தானே... எப்படியோ கொஞ்சம் 'அட்ஜஸ்' செய்து கொள்ளுங்கள். இதற்காக நான் மீசையை இழக்க முடியாது" என்று தெரிவித்தேன்.

அவரும் சம்மதித்தார். புடவையைச் சுற்றிக் கொண்டு முகத்தில் உள்ள மீசையைத் துணியால் மறைத்துக்கொண்டு, பயத்தோடு படுத்திருநதேன். எதிரே உள்ள மக்களுக்கு என்மீசை தெரியாதபடி பக்குவமாகதூக்கிப்பெட்டியில் வைத்து விட்டனர்!

அடுத்தக் காட்சி துவங்குவதற்குள் கோபியின் மனைவி வந்து விட்டார். நான் தப்பித்தேன்.

நாகேஷ் பங்குகொண்ட "அவன் ஒரு தனிமரம்" நாடகம் சென்னையில் நடத்தப்பட்டது.

அந்த நாடகத்தில் படித்துவிட்டு ஊரைச் சுற்றும் பையன் வேடத்தில் நடிக்க வேண்டியவர் ஒரு நாள் வரவில்லை.

"நாடகத்தை கேன்சல் செய்துவிடலாம்" என்று நாகேஷ் கூறினர்,

"உங்களைப்போன்ற முக்கியமானவர்கள் வராவிட்டால் கேன்சல் செய்வது சரி. இதுபோன்றசாதாரண வேடத்தில் நடிக்கின்றவர் வராததற்காகநாடகத்தை 'கேன்சல்' செய்ய வேண்டாம். வேறுயாரையாவது நடிக்க வைக்கலாம்' என்று நண்பர் ஒருவர் கூறினர்.

நாகேஷ்என்னை நடிக்கும்படி கூறிவிட்டார்.

"வசனங்கள் தெரியாது.,.நான் நடித்ததில்லையே...," என்று தயங்கினேன்.

"சாதாரணமாக நீ அரட்டை அடிப்பது போல் மேடையில் தைரியமாக வந்து பேசு, நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று நாகேஷ் எனக்கு துணிவூட்டினர்.

நான் வசனம் புரியாமல் விழிக்கும் போதெல்லாம் அவரேஎடுத்துக் கொடுத்து என்னை நடிக்க வைத்தார்.

நாகேஷும், கோபியும் தந்த உற்சாகம் தான் மேடையில் நடிக்கும் ஆர்வத்தை எனக்குத் தந்தது. அதன் பின்பு 'கிரேசி தீவ்ஸ் இன் பாலவாக்கம்', "டெனன்ட் கமான்மென்ட்ஸ்', 'ஒன் மோர் எக்சார்சிஸ்ட்' போன்ற பல நாடகங்களில் முக்கிய வேடங்களில் நடித்து வருகிறேன். எனினும் அந்த பழைய சம்பவங்களை அடிக்கடி நினைவு கூர்ந்து மகிழ்வேன். நாடகமேடையில் அனுபவம் பெற உதவிய அவை என்றும் என் இதயத்தில் பசுமையாக இருக்கும்!

பேட்டி: 'த'

தேவர் புகழை கருணாநிதியிடம் அடகு வைப்பதா?

# பசும்பொன்தேவர் பார்வர்ட் பிளாக் கட்சி துவக்கம்

சென்னை,நவ.17-பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரின் புகழையும்கட்சியையும கருணாநிதியிடம் அடகுவைக்கிறார்களே என்று கண்டனம் தெரிவித்து அகில இந்திய பசும்பொன் தேவர் பார்வர்டு பிளாக் என்று புதிய கட்சியைத் தொடங்க இருக்கின்றனர்.

இதுபற்றிய விவரம் வருமாறு.

தென்மாவட்ட தேவர்கள் ஆதரவாளர்கள் பலர் சென்னை தியாகராயநகர் மகாலட்சுமி திருமண மண்டபத்தில் கடந்த 14-ந் தேதியன்று மாலை கூடி ஆலோசனைநடத்தினர்கள்.

கூட்டத்திற்கு ஏ. சூரிய நாராயணத்தேவர்தலைமை வகித்தார் கழுகுமலை கே. பி. கணபதி விளக்கவுரை நிகழ்த்தினர்.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் தேவர் அவர்கள் அவரது ஆள் காட்டி விரலைக் காட்டி அதுதான் பார்வர்டு பிளாக் என்றார்.

நேதாஜியைத் தெரியாத மக்கள்கூட தேவர் வாக்கே திருவாக்கு என்று கருதி அவர் சொல்லுகின்ற வேட்பாளர்களை வெற்றி பெறச் செய்தனர் என்று கூட்டத்தில் கூறினர்.

மேலும் பேசியவர்கள் கூறியதாவது:

சென்னை கோட்டைக்கும் டெல்லி பாராளுமன்றத்துக்கும் தானே சென்று நாமும் செல்ல வேண்டிய பாதையைத் தெளிவாகக் காட்டினர். அவர் நடந்து சென்ற பாதை அறிவுள்ளோருக்கு மிகத்தெளிவாகத் தெரிகிறது. அவரது மறைவுக்குப் பிறகு அவரது அடிச்சுவட்டை பின் பற்றி மூககையாத்தேவரின் வழியில் போனேம்.

அதனல் நல்ல சகவாசங்கள் கிடைத்தன. ஆனுல் இன்று புதிய தளபதிகள் பறப்பட்டு வந்துள்ளனர். திருச்சி வரை வந்து விட்டோம் என்று கருதும் போது அவர்களோ லாபம் கருதி திருவாரூருக்கு போய் விட்டார்கள். அந்த வயிறு பிழைப்போரைக் கண்டுதிகைத்துப்போனேம்.

தேவரின் பேரியக்கத்தை-விலை பேசுவதையே வேலையாகக் கொண்ட எவரிடமும் அடிமைபடுத்தி விட மாட்டோம்.

காலம் நம்மைகட்டாயப் படுத்துகிறது. எங்கும் வெற்றி எதிலும் வெற்றிக் கொடி நாட்டிய தேவர் அவர்களின் திருப்புகழை விலைபேசி விட்டார்களே.. அதன் விளைவுமாநகராட்சித் தேர்தலில் தேவரின் திருத்தலமாம் மதுரையில் பார்வர்டு பிளாக் கட்சிக்கு பூஜ்ஜியம் தான்.

ஆகவே இந்நிலையில் தேவரின் திருநாமத்தை நிலை நிறுத்தி அவர் நமக்கு விட்டுச்சென்றுள்ள பணிகளை வீரத்துடனும் விவேகத்துடனும் செய்து முடிக்க புது இயக்கம் காண வேண்டுமென்ற கட்டாயத்திற்காக கட்டுப்பட்டு புதுக் கட்சியை துவக்க இருக்கிறேம் இயக்கத்துக்கு பசும்பொன் தேவர் பார்வர்டு பிளாக் என்று பெயர் வைக்கப் பட்டுள்ளது.

இவ்வாறு பேசியவர்கள் கூறினார்கள்,

பசும்பொன் தேவரின் பிறந்தநாளை தமிழகஅரசே ஆண்டுதோறும் கொண்டாட வகை செய்திருப்பதை வரவேற்று முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றி தெரிவித்து தீர்மானம் போட்டிருக்கின்றனர்.

பசும்பொன் தேவர் பார்வர்டு பிளாக் கட்சியின் தலைவராக ஏ. சூரிய நாராயணத் தேவர் பொதுச் செயலாளராக கழுகுமலை கே. பி. கணபதி ஆகியோர் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

# அரசுநடத்தும் வ.உ.சி. விழா: அமைச்சர் பி. டி. சரஸ்வதி பங்கேற்பு

சென்னை, நவ. 17-சுதந்திரப் போராட்ட வீரரும் முதன்முதலாக ஆங்கிலேயரை எதிர்த்து சுதேசி இயக்கத்தின் மூலம் கப்பல் ஓட்டியதமிழருமான வ.உ. சிதம்பரனாரின் பிறந்தநாள் விழாவை தமிழக அரசு கொண்டாடுகிறது.

நாளை (18ந் தேதி) சனிக்கிழமை மாலை 5 மணிக்கு சென்னை ராணிமேரி கல்லூரியில் நடைபெறும் இவ்விழாவிற்கு அமைச்சர் பி. டி. சரஸ்வதி தலைமை வகிக்கிறார்.

தமிழ்நாடு இ,காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனுர் எம். பி. அரசவைக் கவிஞர் கண்ணதாசன் மதுரை காமராஜ்பல்கலைக் கழக முன்னுள் துணைவேந்தர் சிட்டிபாபு மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.

கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி. யின் பிறந்த நாள் எல்லா மாவட்டங்களிலும் அரசு விழாவாக கொண்டாடப்படுகிறது.

வெள்ள நிவாரணப்பணிக்கு நிதிஉதவி

# பிரதமர் தேசாய்க்கு நாஞ்சிலார் அனுப்பிய அவசரக் கடிதம்

சென்னை,நவ.17-தமிழ்நாட்டில் ஏற்பட்ட வெள்ளச் சேதம்- நிலச்சரிவு பாதிப்பு ஆகியவற்றுக்கு நிவாரணம் அளிக்க நிதிஉதவிகோரி பிரதமர் தேசாய்க்கு நிதி அமைச்சர் நாஞ்சிலார் நேற்று கடிதம் அனுப்பியுள்ளார்.



வெள்ளச் சேதத்தைப் பார்வையிட மத்திய நிபுணர் குழுவை அனுப்பி வைக்குமாறும் அவர் கேட்டுள்ளார்.

இந்தக் கடிதத்தை தமிழக அரசின் சிறப்பு பிரதிநிதி க. ராசாராம் நேற்று சென்னையில் இருந்துஎடுத்துச்சென்றார்.

வெள்ளச்சேதம் புயல் நிவாரணம் பற்றி நேற்று நடந்த உயர் மட்டக்குழு முடிவுகளை தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் நிருபர்களிடம் விளக்கினர்.

கார்த்திகேயன் கூறியதாவது:-

வெள்ளத்தாலும் நிலச்சரிவாலும் ஏற்பட்ட பாதிப்பு பற்றியும், நிவாரணப் பணிகள் குறித்தும் விவாதிக்கப்பட்டது.

நிவாரணப் பணிகளைச் சிறப்பாகச் செய்ய தமிழக அரசினுல் மட்டும் இயலக் கூடியதல்ல. மத்திய அரசின் உதவியைப் பெற்றுத்தான் துயர் துடைப்புப் பணிகளைச் செய்யமுடியும்.

ஆகவே நிதிஉதவி கோரியும், மத்திய நிபுணர் குழுவை அனுப்பிவைக்கக் கோரியும் பிரதமருக்கு நிதி அமைச்சர் கடிதம் எழுதியுள்ளார்.

இக்கடிதத்தை தமிழக அரசின் சிறப்பு பிரதிநிதி ராசாராம் டெல்லிக்கு எடுத்துச் சென்று பிரதமரிடம் கொடுத்து வற்புறுத்துவார்.

## சேதம் எவ்வளவு?

சேதவிவரங்கள் தயாரிக்கப்பட்டு வருகிறது. மத்திய நிபுணர் குழுவிடம் இது பற்றிய முழு அறிக்கை தரப்படும்.

மத்திய நிதி உதவிவரும் வரைகாத்திராமல் தமிழக அரசு அவசர இனங்களில் துயர் துடைப்பு பணிகளை மேற்கொண்டுள்ளது.

1977 ம் ஆண்டு அளித்த நிவாரணப் பணிகளைப் போல விவசாயிகட்கும், நெசவாளர்கட்கும் உதவி தரப்படும்.

சிறு விவசாயிகட்கு அதிக நன்மை கிடைக்கும் வகையில் இந்த உதவி இருக்கும்.

குடிசைகள் இழந்தவர் கட்குநீலகிரிமாவட்டத்தில் ரூ. 200 தரப்படும். மற்ற இடங்களில் ரூ 100 வரை உதவி தரப்படுகிறது.

வெள்ளம் நிலச்சரிவால் இறந்தவர் எண்ணிக்கை 143ஆக உயர்ந்துள்ளது. இவ்வாறு கார்த்திகேயன் கூறினர்.

# பெங்களூரில் பெரியார் நூற்றுண்டு விழா

பெங்களூர், நவ. 17 பெங்களூரில் உள்ள தமிழ்ச் சங்க திருவள்ளுவர் அரங்கில் நாளை (சனிக்கிழமை) மாலை 6 மணிக்கு பெரியார் நூற்றுண்டு விழா கொண்டாடப்படுகிறது. புலவர் வி.பொ. பழனி வேலனுர் தலைமையில் தமிழ்க் குடிமகனுர், இரா. இளவரசு, பாவை எழிலேந்தி கு. பூங்காவனம், இரா. சு.மதிவாணன் ஆகியோர் பேசுகின்றனர்.

# குத்துச் சண்டை சங்க ஆண்டு விழா

சென்னை, நவ. 17- பி. ஆர். கணபதியார் குத்துச் சண்டை சங்கத்தின் 4-வது ஆண்டுவிழா வியாசர்பாடி சத்தியமூர்த்திநகரில் நாளை மாலை6 மணிக்குநடக்கிறது.

ஸ்டேன்லி சண்முகம் தலைமையில் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர் சண்ணன், ராமச்சந்திரன். கே. மனோகரன், எம். ஏ. முத்து. காசிநாதன் ஏ. முனுசாமி எம்.எஸ்.மணி, ஆர்.மூர்த்தி மற்றும் பலர் பேசுகின்றனர்.

# சங்கு தொழிலாளருக்கு போனஸ்: அமைச்சர் எட்மண்ட் தகவல்

புதுக்கோட்டை, நவ. 17- சங்கு குளித் தொழிலாளர்களுக்கு விரைவில் போனஸ் வழங்க இருப்பதாக அமைச்சர் எட்மண்ட் தெரிவித்தார்.



முகவை, புதுக்கோட்டை மாவட்டங்களில் அமைச்சர் எட்மண்ட் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு பேசினர்.

ராமநாதபுரம் மாவட்டம் வேதாளை என்னுமிடத்தில் தனியார் துறையினரால் நிர்வகிக்கப்பட்டு வந்த சங்குகுளித் தொழில் அரசுடைமை யாக்கப் பட்ட நிகழ்ச்சியில் அமைச்சர் எட்மண்ட் பேசினர்.

விழாவில் எட்மண்ட் கூறியதாவது:

சங்கு குளிக்கும் தொழிலாளர்களுக்கு, சங்குகுளி வருமானத்தில் இருந்து ஒரு பகுதியை போனசாக வழங்க விரைவில் உத்தரவிடப் படும். தொழிலாளர்கள் கடலில் மூழ்கி எழும்ப தேவைப்படும கயிறுக்காக தனியார் துறை 2. ரூபாய் 50 காசு கொடுக்கிறது. இதற்கு அரசு மானியமாக 10 ரூபாய் அளிக்கிறது.

## விசேஷ காலணிகள்

தவிர கடலில் மூழ்கி நீந்துவதற்கு விசேஷ காலணிகள் வழங்கவும் அரசு திட்டமிட்டுள்ளது.

சங்குகுளித் தொழிலாளர்களுக்கு இன்சூரன்ஸ் வசதி, வீடுகள் கட்டிக் கொடுக்கும் திட்டமும் அரசிடம் இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் எட்மண்ட் பேசினர்.

## பள்ளி திறப்பு விழா

புதுக்கோட்டை அரசினர் மன்னர் கல்லூரி முத்தமிழ் விழா அறந்தாங்கிதாலுகா சித்தன்காடு பஞ்சாயத்து யூனியன் பள்ளித்திறப்பு விழா, மாங்குடி பஞ்சாயத்து யூனியன் பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா திருநெல்வேலியில் ராணுவ பயிற்சி முகாம் ஆகியவற்றில் அமைச்சர் எட்மண்ட்கலந்துகொண்டு பேசினர்.

# காளிமுத்து பேட்டி...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

சிக்கு சொந்தமான நிலத்தில் உள்ள குடிசைகள் தனியார் நிலத்தில் உள்ள குடிசைபகுதிகள் ஆகியவை ஆகும் 1971-ஆம் ஆண்டு கணக்குப்படி சென்னை நகரில் 1202 குடிசைப் பகுதிகள் இருக்கின்றன இப்பொழுது சற்று அதிகரித்து இருக்கலாம்.

அரசு, மாநகராட்சிப் பகுதியில் உள்ள நிலத்தில் உள்ள குடிசைகளுக்கு, சாலை, கழிவிடம் குடிநீர் போன்றவை வழங்கப்படும்.

சென்னை நகருடன் புதிதாக இணைக்கப்பட்ட பகுதிகளில் அபிவிருத்திப் பணிகளுக்காக 5 கோடி ரூபாயை தமிழ்நாடு அரசு ஒதுக்கியுள்ளது.

## சொத்து வரி உயர்வுஇல்லை

சென்னை நகரில் சொத்து வரியை உயர்த்தும் உத்தேசம் இல்லை.

சென்னை மாநகராட்சியில் உள்ள 34 உயர்நிலைப் பள்ளிகளில் எஸ். எஸ் எல் சி படிக்கும் 5650 மாணவர்களுக்கு ஆங்கிலம், கணிதம், விஞ்ஞானம் சரித்திரம், புவியியல் ஆகிய பாடங்களுக்கான பயிற்சி நோட்டு புத்தகங்கள் இலவசமாக வழங்கப் பட்டிருக்கிறது.

பள்ளியிறுதி வகுப்பின் (எஸ் எஸ் எல் சி ) பயிலும் மாநகராட்சிப் பள்ளி மாணவர்களுக்கு பொதுத்தேர்வு நடத்தி தேர்வுகளில் அதிக மதிப்பெண் பெறும் மாணவர்களுக்கு முதல் பரிசு ரூ 25 இரண்டாம் பரிசு ரூ 15 மூன்றுவது பரிசு ரூ 10 என வழங்கப்படும்.

சென்னை நகருடன் புதிதாக இணைக்கப்பட்ட பகுதிகளில் 2,195 விளக்குகள் எரியாமல் இருந்தது இவற்றில் 1260 விளக்குகள் சரி செய்யப்பட்டுவிட்டன.

சென்னையில் இரண்டரை லட்சம் பேருக்கு காலரா தடுப்பு ஊசிகள் போடப்பட்டிருக்கிறது கொசுத் தொல்லையை ஒழிப்பதற்காக 20 விசைத் தெளிப்பான்கள் மூலம் சக்தி வாய்ந்தமருந்துகள் தெளிக்கப்பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்துகூறினர் சிறப்பு அலுவலர்ராமதாஸ், ஆணையாளர் ஆறுமுகம் ஆகியோர் உடனிருந்தனர்.

# இலவச தையல் பயிற்சி: மகளிர்க்கு வேண்டுகோள்

சென்னை, நவ. 17- தமிழக அரசு, சமூக நலத்துறை, சென்னையில் வசிக்கும் பெண்களுக்கு பட்டினப்பாக்கம், தேனும்பேட்டை, திருவல்லிக்கேணி, கோட்டூர்புரம், ஆகிய இடங்களில் இலவச தையற்பயிற்சியை நடத்துகிறது. வயது 18லிருந்து 30க்குள்ளான அவர்களின் குடும்பஆண்டு வருமானம் ரூ. 3,000க்குள் இருக்கும் பெண்கள் இதற்கு விண்ணப்பிக்கலாம். மேலும் விண்ணப்பதாரர் தாழ்த்தப்பட்ட வகுப்பு, பிற்படுத்தப்பட்ட வகுப்பு, ஆசிரியர் குடும்ப உறுப்பினர் முன்னுள் இராணுவக் குடும்ப உறுப்பினர் இவைகளில்ஏதாவதுஒருபிரிவைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும். இவைகளுக்கான சான்றிதழ்கள் விண்ணப்பத்துடன் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

1979-ம் ஆண்டு ஜனவரி முதல்டிசம்பர்மாதம்முடிய ஒரு வருடம் பயிற்சிக்காலமாகும். உதவித் தொகையாக மாதம் 30 ரூபாய் வழங்கப்படும். பயிற்சிக் காலத்தின் இடையே பயிற்சி பெறுவதை நிறுத்திக்கொண்டால் அதுவரை பெற்றஉதவித்தொகையை அவரோ அல்லது அவரது காப்பாளரோ திருப்பிச் செலுதத வேண்டும்.

விண்ணப்பப்படிவத்தினை சென்னை எழும்பூர் பாந்தியன் சாலையிலுள்ள சமூக நல அலுவலகத்தில் நேரடியாக பெற்றுக்கொள்ள வேண்டும். விண்ணப்பங்களை அனுப்புவதற்கான கடைசித் தேதி 30-11-78.

# குமரி மாவட்ட மாணவத் தோழர்கட்கு

கன்னியாகுமரி மாவட்ட அனைத்திந்திய அண்ணு திராவிட மாணவர் முன்னேற்றக்கழக செயல் வீரர் கூட்டம் வருகிற 23-ந்தேதி (வியாழன்) மாலை5மணிக்கு நாகர்கோவில் பகவதி லாட்ஜ் மாடியில் நடக்கிறது என்று மாணவர் அமைப்பாளர் கோ. ராதா கிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

# தலைமை கழக அறிவிப்பு

## கிளைக் கழகங்களுக்கு வேண்டுகோள்

புரட்சித் தலைவர் அவர்களின் விருப்பத்திற்கிணங்க உறுப்பினர் விண்ணப்பத்தாள்களைப புதுக்கிப் புதிய உறுப்பினர் சீட்டுகளைக கழகத் தோழர்கள் அனைவருக்கும் அனுப்ப வேண்டியிருக்கிறது.

கிளைக் கழகங்களின் தெளிவான முகவரியும், தற்போது அமைப்பாளர் பொறுப்பு வகிப்பவர்களின் முழுமையான முகவரியும் தலைமைக் கழகத்திற்கு தேவைப்படுகின்றன

கிளைக்கழக அமைப்பாளர்கள் முகவரியை அளிப்பதோடு, அந்தந்தக் கிளைக்கழகத்திற்கு எவ்வளவு உறுப்பினர் தாள் தேவைப்படும என்ற குறிப்பையும் குறிததனுப்பக் கேட்டுக் கொள்கிறேம்.

ஆங்காங்குள்ள மாவட்டக் கழக அமைப்பாளர்களும், தொகுதிக் கழக அமைப்பாளர்களும், ஒன்றியக் கழக அமைப்பாளர்களும, கிளைக்கழகங்கள் அவற்றின் அமைப்பாளர்கள் பற்றிய விவரங்களைத தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க ஆவன செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இனிக் கழகத தோழர்கள் அனைவரும் புதிய விண்ணப்பத்தாள்களமூலம் பழையவர்கள் தங்கள் உறுப்பினர் தகுதியைப் புதுப்பிததுக் கொள்ளவேண்டிய இன்றியமையாமையும புதியவர்கள் புதிதாகப் பதிவு செய்துகொள்ள வேணடிய இன்றியமையாமையும் ஏற்படும.

இரா. நெடுஞ்செழியன்
அவைத் தலைவர், பொதுச்செயலாளர் (பொறுப்பு)

சென்னை
13-11-78

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

## கே. கே. நகர் கழகத் தோழர்களுக்கு

கே. கே. நகர் கழகப் பொது உறுப்பினர்கள் கூட்டம் வருகிற 19-ந்தேதி ஞாயிறு மாலை 6 மணிக்கு சிவலிங்க புரத்தில் உள்ள 233-ம் எண்ணுள்ள இடத்தில் ஆலந்தூர் தொகுதி துணைச் செயலாளர் எஸ். எம். துரையரசன் தலைமையில் நடக்கிறது. கழக உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு தெரிவிக்கப்பட்டுள்ளது.

## மெட்ரிகுலேஷன் பள்ளிகள் அங்கீகாரம்

சென்னை, நவ. 17- மெட்ரிகுலேஷன் பள்ளிகளை அங்கீகரிப்பதில் சென்னை பல்கலைக்கழகத்திற்கு எந்தவித அதிகாரமும் இல்லை என்று அரசு உத்தரவு பிறப்பித்துள்ளதாக பள்ளிக் கல்வி இயக்குனர் வெங்கட சுப்பிரமணியம் கூறினார்.

தமிழ்நாடு, புதுவையில் உள்ள மெட்ரிகுலேஷன் பள்ளிகள் தமிழ்நாடு மெட்ரிகுலேஷன் கல்வி வாரியத்தில் அங்கீகாரம் பெற வேண்டும் என்று அரசு ஏற்கனவே உத்தரவு பிறப்பித்துள்ளது.

பள்ளிக்கல்வி இயக்குனர் இதன் தலைவராகவும் மெட்ரிக்குலேஷன் பள்ளிகள் இயக்குனர் இதன் செயலாளரும் ஆவர்.



# தள்ளாடுவது மதுவிலக்கு சட்டமல்ல: கருணாநிதிதான் தள்ளாடுகிறார்

## அமைச்சர் காளிமுத்து சாட்டை

சென்னை, நவ. 17 'மதுவிலக்கு சட்டம் தள்ளாடுகிறது என்கிறார் கருணாநிதி. தள்ளாடுகிறவர்களுக்குத்தான் கோபுரமும் கட்டிடமும் தள்ளாடுவது போல்தெரியும் கருணாநிதிதான் தள்ளாடுகிறாரே தவிர மதுவிலக்கு சட்டமல்ல' என்று அமைச்சர் காளிமுத்து காட்டமாக பதில் அளித்தார்.

சென்னை 48வது வட்டம் பட்டாளம் சிவராவ் ரோடில் நடைபெற்ற மகளிர் அமைப்பு ஏற்பாடு செய்திருந்த கழகப்பொதுக் கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து கலந்து கொண்டு பேசினார்.

கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து, அடியார், கழக மாநிலமகளிர் அமைப்பாளர் மதுரை வள்ர்மதி, டி. சகுந்தலா, கஸ்தூரிபாலன், துரைராசன், முனுசாமி, கிருஷ்ணன், பன்னீர் செல்வம், கந்தசாமி, அறிவழகன், ஜெயராமன், தன்ராஜ், அம்சாமேரி, மீனும்பிகை, வண்ணைஜெயா உபகாரமேரி மற்றும் பலர் பேசினர்.

அமைச்சர் காளிமுத்து பேசும்போது கூறியதாவது:-

தமிழக மக்களின் இதயத்தில் இடம் பெற்ற புரட்சித்தலைவர் உலகை வலம் வந்து கொண்டிருக்கிறார். அவர் உலகம்சுற்றும் வாய்ப்பை இப்போதுபெற்றிருப்பது ஒன்றும் புதிதல்ல. ஏற்கனவே கலைஉலகில் தொடர்பு கொண்டிருக்கும் போது உலகை வலம்வந்து உலகம் சுற்றும் வாலிபன் படத்தை நமக்கு தந்திருக்கிறார்.

இன்றைக்கு உலகம் போற்றும் தலைவராக-தமிழகத்தின் தன்னிகரற்ற தலைவராக பயணம் செய்து கொண்டிருக்கிறார்.

அந்தந்த அயல் நாடுகளின் அழைப்பை ஏற்று, தமிழக மக்களின் இதயம் கவர்ந்த தலைவரே நீங்கள் எங்கள் நாட்டுக்கு வாருங்கள் என்று அவர்கள் விடுத்த அன்பழைப்பை ஏற்று சென்றிருக்கிறார்.

மெக்சிகோ, ஜப்பான், சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் பயணம் செய்கிறார்.

தமிழக முதல்வர் வெளிநாடு பயணத்தை மேற்கொண்டிருக்கிறார. இந்த நேரத்தில்தமிழகஆட்சியை-அரசை பதம் பார்த்துவிடலாம் என்றுநாகரிகம்அற்ற சில கட்சித் தலைவர்கள் நினைக்கிறார்கள். அவர்களுக்கு நான் உறுதியாகச் சொல்லிக்கொள்வதெல்லாம் புரட்சித்தலைவரிடம்பயிற்சி பெற்றவர்கள் பக்குவம் பெற்றவர்கள். இங்கே நப்பாசை கொண்டு ஆட்டம போடும் சிலகட்சித்தலைவர்களை சந்திக்கும் அளவிற்கு பயிற்சியை கழகத்தினர் பெற்று இருக்கிறோம்.

### துவண்ட போராட்டங்கள்

மதுவிலக்கு சட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் கடுமையாக்கினார். பேரறிஞர் அண்ணா விரும்பியபடி மதுவிலக்கு சட்டம் கடுமையாக்கப்பட்டுள்ளது. புரட்சித்தலைவர் மனிதாபிமானத்தின் அடிப்படையில் மதுவிலக்குசட்டத்தை கடுமையாக்கினார்.

ஆனால் கருணாநிதியோ மதுவிலக்கு சட்டமே தள்ளாடுகிறது என்று பேசியிருக்கிறார்.

தள்ளாடுகிற பேர்வழிகளுக்கு கட்டிடத்தைப் பார்த்தால் தள்ளாடுவதைப்போல் தோன்றும். கோபுரத்தைப் பார்த்தால் தள்ளாடுவதைப் போல் தோன்றும்.

மதுவிலக்கு சட்டம் தள்ளாடவில்லை கருணாநிதிதான் தடுமாறுகிறார் கழக அரசு தனிப்பட்ட சொந்த லாபத்திற்காக இயங்குவதல்ல. நாலரைகோடி மக்களின் நலனைக்கருத்தில் கொண்டு- சமுதாயத்தின் அடித்தளத்தில் இருப்பவர்களை முன்னேற்றப் பாடுபடும் அரசு கழக அரசு.

கடந்த ஒன்றரை ஆண்டு காலமாக கழக ஆட்சிக்கு எதிராக எதிர்க்கட்சியினா நடத்தியபோராட்டங்களை புரட்சித்தலைவர் சமாளித்தார்.

### புதிய ஆசை நிறைவேறாது

சமீபத்தில் எதிர்கட்சிக்கள் 'பந்த்' நடத்தின. அந்த பந்த் படுதோல்வி அடைந்தது. குக்கிராமம் உட்பட அனைத்து நகரங்களிலும் கடைகள்திறந்தே வைக்கப்பட்டிருந்தன.

'பந்த்' தோல்வி அடைந்தது பற்றி கருணாநிதி மதுரையில் பேசும்போது 'பந்த் தோல்வியா வெற்றியா என்பதல்ல, இந்த அரசு தொழிலாளர் நல விரோத அரசு என்று கூறியிருக்கிறார்.

இந்த அரசு தொழிலாளர் நல விரோத அரசாக இருந்தால் இவர்கள் நடத்திய 'பந்த்'வெற்றி பெற்றிருக்க வேண்டுமே? 'பந்த்' தோல்வி அடைந்ததன் மூலம் அவர்கள் வாதம் பொய்யானதுஎன்றுமக்கள் தீர்ப்பளித்தனர்.

பேசித்தீர்க்க வேண்டிய தொழிலாளர் பிரச்சினைகளை-தொழிற்சங்கங்களிடையே உள்ளகவுரவத்தைவைத்துக் கொண்டு பிரச்சினையை பூதாகாரமான தாக்கி தொழிலாளர்களை பட்டினி போட நினைக்கிறார்கள்.

பாண்டிச்சேரியில் அரசு கவிழ்க்கப்பட்ட பிறகு கருணாநிதி கட்சியினருக்கு புதிய ஆசை பிறந்திருக்கிறது.

### பாவம் மு.க.

கோவையில் தி. மு. க எம். பி. ஆசைத்தம்பியை நிருபர்கள் பாண்டிச்சேரி பற்றி கருத்துக் கேட்டிருக்கிறார்கள், ஆசைத்தம்பியும் ஆசையோடு தமிழ்நாட்டிலும் அந்தநிலைமை வராதா? என்று கூறியிருக்கிறார்.

ஆசைத்தம்பியின் கனவு நடவாது

ஓராண்டுகாலத்தில் புரட்சித்தலைவரின் நிர்வாகத் திறமையைப் பார்த்து தமிழக மக்கள் போற்றுகிறார்கள். பக்கத்து மாநிலத்தவர்கள் வியந்து பாராட்டுகிறார்கள்.

தமிழகம் பல முதலமைச்சர்களை சந்தித்திருக்கிறது. பேரறிஞர் அண்ணாவுக்குப் பிறகு புரட்சிததலைவர் சிறப்பான ஆட்சியை அமைத்திருக்கிறார்.

கோட்டைக்கு கருணாநிதியை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கும் அளவிற்கு தமிழ் மக்கள் இளிச்சவாயர்கள் அல்ல என்பதை கருணாநிதி உணர வேண்டும்.



புரட்சித்தலைவர் ஒரு முறைகூறும்போது "கண்டியில் பிறந்து சிறுவயதிலேயே தமிழகம் வந்த என்னை தமிழகம் வளர்த்தது. நான் குண்டு அடிபட்டு கிடந்தபோது தமிழகத்தின் தாய்குலமும் மக்களும் கலங்கினர். அப்படிப்பட்ட தமிழகத்திற்கு கடைசி ரத்தம் உள்ளவரை உழைக்ககடமைப்பட்டிருக்கிறேன்" என்றார். அப்படிப்பட்ட தலைவரை இழக்க தமிழகம் தயாராக இல்லை.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

## கழகச் செய்திகள்

### சிதம்பரம்

18-11-78 சனிக்கிழமை மாலை 6மணிக்கு கீழவீதியில் செய. தில்லை கோவிந்தன் தலைமையில் நடக்கும் கூட்டத்தில் பேசுவோர்: அமைச்சர் எஸ். டி. எஸ், வி. வி. சுவாமிநாதன் எம். பி. அ. முருகேசன் எம். பி. ரத்தினபாலகுருசாமி எம். எல். சி., தில்லை வில்லாளன், முத்து கோவிந்தராசன் கே. ஆர். கணபதி மற்றும் பலர்.

### வாலாஜா பேட்டை

18-11-78- சனி மாலை 6-30மணிக்கு தினசரி சந்தை எதிரில் எஸ். ராஜேந்திரன் தலைமையில் பேசுவோர்: கே. ஜே. உய்யகொண்டான் எம்எல் ஏ., பி. ஏ. கோவிந்தன், கோ. வி. எஸ். மோகனன் கோ. சண்முகம், கா. து முருகேசன், லாடவரம் பழனி, ஆர். முருகேசன், லோகநாதசிங், கே. காத்தவராயன் மற்றும் பலர்

## நிலச்சுவான்தார் ரிட் மனு தள்ளுபடி

சென்னை, நவ. 17 விவசாயிகள் குத்தகைதாரர் பாக்கி பாதுகாப்பு சட்டத்தை அரசு கொண்டு வந்தது செல்லாது என்று அறிவிக்கக் கோரி நிலச்சுவான்தார்கள் சார்பில் உயர்நீதி மன்றத்தில் ரிட் மனு தாக்கல் செய்யப்பட்டது.

ரிட்மனுவை விசாரித்த நீதிபதிகள் டி. ராமப்பிரசாத்ராவ், டி. ராமானுஜம் ஆகியோர் அந்த ரிட்மனுவைத் தள்ளுபடி செய்தனர்.

நாட்டு நலனில் அக்கறை கொண்ட தமிழக அரசு ஏழை விவசாயிகளை பாதுகாத்து அவர்களை வாழ்விக்க இந்த சட்டத்தை அரசுகொண்டு வந்தது என்று கூறி நீதிபதிகள் மனுவை தள்ளுபடி செய்தனர்.

# நலிந்து கிடக்கும் மக்கள் உயர்வு பெற பாடுபடும் கழக அரசு

## சிலம்புச்செல்வர் ம. பொ. சி. பாராட்டு

சென்னை, நவ 17— சமுதாயத்தில் நலிந்து கிடக்கும் மக்கள் உயர்வு பெறவேண்டும் என்பதற்காக தமிழக அரசும், முதல்வர் புரட்சித் தலைவரும் பாடுபட்டு வருகின்றனர் என்று சிலம்புச் செல்வர் ம. பொ. சி. கூறினார்.

சென்னை வள்ளுவர் கோட்டத்தில்நடைபெற்ற உழவர்நாள் விழாவில் மேலவைத்தலைவர் சிலம்புச்செல்வர் ம. பொ. சி. கலந்து கொண்டுபேசினார்.

ம. பொ. சி. பேசும் போது கூறியதாவது:

"இந்தஆட்சி சமுதாயத்தில் நலிந்து கிடக்கும் மக்களை உயர்வுபெறச் செய்ய வேண்டும் என்று செயல்படுகிறது. இந்த ஆட்சியின் முதல்வர் அதற்காக பெரும் முயற்சியை எடுத்து வருகிறார.

சந்தா வசூலிப்பதில் ஆர்வம்காட்டும் தொழிற்சங்கத் தலைவர்கள் அந்தத் தொழிலாளர்களை சிக்கன சேமிப்பில் - கூட்டுறவில் சேர்ப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை. அந்த தொழிலாளர்களை கூட்டுறவில் சேர்ப்பதற்குதொழிற்சங்கத் தலைவர்கள் முன்வர வேண்டும்.

இவ்வாறு ம. பொ. சி. கூறினார்.

### ராசாராம்

தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி க. ராசாராம் பேசும்போது கூறியதாவது:

நலிந்தவர்களை ஏற்றிவிடும் ஏணியாக கூட்டுறவுத் துறை திகழ்கின்றது. கூட்டுறவுத்துறையில் அரசியல் புகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் ஊழல் நடைபெறாமல் இருக்கும். ஒருவனுக்கு கடன் தரும்போது நிலமிருக்கிறதா என்று பார்ப்பதைவிட அவனுக்கு உழைக்கும் மனம் இருக்கிறதா? பலம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.

இவ்வாறு க. ராசாராம் பேசினார்.

### அமைச்சர் குழந்தைவேலு

அமைச்சர் குழந்தைவேலு பேசும்போது கூறியதாவது.

கூட்டுறவு சங்கத்தில் ஏற்பட்ட அவப்பெயர் அகற்றப்படும் விதத்தில் கழக ஆட்சி-புரட்சித்தலைவரின் ஆட்சி செயல்பட்டு வருகிறது.

உழைக்கும் கரங்களுக்கு உயர்வு கொடுங்கள் என்று அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறேன். கூட்டுறவு வங்கியில் கடன்வாங்கினால் அதிக வட்டி தர வேண்டியிருக்கிறது என்கிறார்கள். 12.5 சதவிகிதமாக இருந்த வட்டி விகிதத்தை 10.5 சதவிகிதமாக அரசே குறைத்து இருக்கிறது.

அதுபோல நீங்கள் ரிசர்வ் வங்கியிலிருந்து வாங்கும் பணத்துக்கு என்ன வட்டி விகிதமோ அதற்குமேல் உங்களுக்கு ஆகும் செலவையும்சேர்த்து மிகக் குறைந்த அளவில்

(4-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தித்தொடர்ச்சி)

வட்டி வைத்துக் கொடுக்க வேண்டும்.

தமிழகம் முழுவதும் 167 ஒன்றியங்களில் உள்ள 10 லட்சம் பேர்களில் 7லட்சம் பேர் கூட்டுறவு சங்கத்தில் உறுப்பினர்களாக உள்ளனர்.

விவசாயிகளின் நன்மையைக்கருதி 77-78ல்ரூ. 127 கோடியாக இருந்த கடனை 78 - 79-ல் 145 கோடி ரூபாயாக உயர்த்தி அளிக்க இருக்கிறீர்கள். 1982-83ம் ஆண்டில் 250கோடிரூபாய் தேவைப்படும் என்று மதிப்பிட்டிருக்கிறீர்கள். விவசாயிகளுக்கு உதவி செய்ய முன்வந்திருக்கும் கூட்டுறவு வங்கிநிர்வாகிகளைபாராட்டுகிறேன்.

அதேநேரத்தில், "கடன் வாங்கி பயிரிட்டவனும் மரமேறி கைவிட்டவனும் ஒன்று எனச் சொல்லுவார்கள். நீங்கள் அளிக்கும் கடன் பணம் நல்லமுறையில் பயன்படுத்தப்படுகிறதா என்பதை பார்க்க வேண்டும்.

### ஜப்தி வேண்டாம்

கூட்டுறவுத் துறையினர் ஜப்தி நடவடிக்கையை மேற்கொள்கிறார்கள் என்று சொல்கிறார்கள். சிறு விவசாயிகளின் கடன்களுக்காக ஜப்தி நடவடிக்கையை மேற்கொள்ளக்கூடாது என்று முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

அப்படி ஜப்திநடவடிக்கை எடுக்கப்பட்டால் பாதிக்கப்பட்ட சிறுவிவசாயிகள் உடனடியாக அரசுக்கு தெரிவிக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

# பேரறிஞர் அண்ணாவின் பார்வதி பி.ஏ



நாடக ஆக்கம் & உரையாடல்

ப. நீலகண்டன்

(குமார் சிரிக்கிறான். பார்த்திபன் தன் பாக்கெட்டிலிருந்து கையை எடுக்காமலேயே திகைப்புடன் குமாரைப் பார்க்கிறான்.)

பார்த்:- என்னசாமி? ஏன் சிரிக்கறே...?ஏன் சிரிக்கறே...? (தொடர்ந்துசிரிக்கிறான்)

குமா:- முட்டாளே! என்னை கொலை செய்ய எங்கிட்டியே அட்வான்ஸ் தரப் போறியா?

பார்த்: யாரீ நீ?

குமா: நீ ஒரு உத்தமத்தலைவன் ... யோக்கியமான நண்பன் ... சுயநலமில்லாத மனிதன் ... என்றெல்லாம் நம்பிஏமாந்தவன்! (அவன் தனது வேஷத்தைக் கலைக்கிறான்)

பார்த்:-குமார்! (பார்த்திபன் திடுக்கிடுகிறான்)

குமார்: ஆமாம்! உன்னுடைய உயர்வுக்கு ஏணியாகவும், உன்னைத் துன்பம் சூழும்போதுதோணியாகவும் இருந்த அதே குமார்தான்! ஏறி வந்த ஏணியை எட்டிஉதைத்த இரக்கமற்றவனே! காரியம் முடிந்ததும் தோணியைக் கவிழ்த்த கல் நெஞ்சக்காரனே! உன் பாவங்களுக்குக் கணக்கு பார்க்கும் நேரம் வந்து விட்டது!

பார்த்:- நீ... என் கணக்கை பார்க்கப்போறியா?

குமா:- இல்லே... உன் கணக்கைத் தீர்க்கப்போறேன்.

பார்த்: வேஷம் போட்டே என்னைவிழ்த்திடலாம்னு வந்தியா?

குமா: யாரையும் வீழ்த்துறதுக்காக நான் வேஷம் போடலே! ஆரவாரத்துக்குள்ளே ஒளிந்திருக்கிற அதர்மத்தைவெளிப்படுத்தத்தான் வேஷம் போட்டேன்!

பார்த்: காரணம் எதுவாகவோ இருக்கட்டும் அண்ணே! நீ இப்படி வேஷம் போட்டது கேவலம் இல்லையா?

குமா: (கிண்டலாக) என்னை மட்டும் சொல்றியே தம்பி! இப்ப நீபோட்ட வேஷம்ஞாபகம்இல்லே?

பார்த்: வாயை... மூடு...! (கத்திக் கொண்டே பாக்கெட்டிலிருந்து கையை எடுக்கிறான் அவன் கையில் துப்பாக்கி இருக்கிறது.)

பார்த் : முதல்ல உன் வாயை மூடுனு, அப்புறம் ஊரார் வாய் தானு மூடிக்கும்!. புலியை எதிர்க்கப்புள்ளிமான்வந்ததைப்போல.. போர் யானையுடன் சண்டையிடபூனைக்குட்டி புறப்பட்டதைப் போல என்னைஎதிர்த்துநிகிளம்பியிருக்கறியா? முடியுமா உன்னால்? (லமாகச் சிரித்துக் கொண்டே துப்பாக்கியைகுமாரின்நெஞ்சுக்கு நேராகநீட்டியவாறு நெருங்குகிறான். அப்போது குமார்...,குமார் ,..: என்று அலறிக் கொண்டே ஓடி வந்து குமாரை மறைத்து கொண்டு நிற்கிறாள் பார்வதி)

பார்வதி: இரத்த வெறி பிடித்தமிருகமே! கொலை செஞ்சாத்தான் உன் வெறி அடங்கும்னா முதல்ல என்னைச்சுடு!

பார்த்: நான் உன்னைச் சுடுவதா? இல்லை பார்வதி! நீதான் என் இதயத்தை சுட்டுப் பொசுக்கறே... உன் காந்தக் கண்களினால்!

பார்வதி: பார்த்திபா!

பார்த்: இப்படியெல்லாம் உங்கிட்டேப் பேசணும்னு நானும் ஆசைப்பட்டதுண்டு! ஆனா இப்போ... உங்க ரெண்டுபேர் இதயத்தையும் கிழிச்செறிஞ்சாத்தான் என் மனசுல அமைதி ஏற்படும்! (பார்த்திபன் சுடப் போகிறான். 'டுமீல்' என்று ஒரு வெடிச் சத்தம். பார்த்திபன் ''ஆ'' என்று அலறிக் கொண்டே தன் கையைப் பிடித்துக் கொள்கிறான். அவன் கையிலிருந்த துப்பாக்கிஎகிறிப்போய் தொலைவில் விழுகிறது. பார்த்திபனின் கையிலிருந்து இரத்தம் கொட்டுகிறது. நீட்டிய ரிவால்வாருடன் சப்- இன்ஸ்பெக்டரும் இரண்டுகான்ஸ்டபிள்களும் வருகின்றனர்.)

சப்- இன்ஸ்:- பார்த்திபன்! உங்களைக் கைது செய்கிறேன்.

பார்த்:- என்ன அரஸ்ட் பண்றது இருக்கட்டும் சார்! இதோ... இந்தக் குமார் சங்கப் பணத்தை எடுத்துகிட்டு சாமியார் வேஷத்துல ஓடிப்போனவன்!

பார்வதி: அதெல்லாம் உன் மாதிரி ஆளுங்க செய்யறது! தன் பணத்தை எடுத்து எடுத்து சங்கத்துக்குக் கொடுத்த தன்னலமில்லாத தொண்டர் அவர்!

சப்-இன்ஸ்: மிஸ்டர் குமார், மிஸ் பார்வதி உங்க உதவிக்கு ரொம்ப நன்றி! வழியில் ஜீப் ரிப்பேர்... கொஞ்சம் லேட்டாயிட்டுது!

குமா: அதைத்தான் பார்வதி அருமையா சமாளிச்சிட்டாங்களே!

பார்: ஆமாசார்! நீங்கவர்றதுக்குள்ளே பார்த்திபன் தப்பிச்சுப் போயிடக் கூடாதுன்னுதான்...



பார்த்:-குமார்!

குமா:- ஒரு முறை நீ தப்பிச்சிட்டே! இனிமே ஒவ்வொரு முறையும் நீ தப்பி ஓடிடலாம்னு நினைச்சியா? பார்த்திபா! இப்பவாவது என்னைப் புரிஞ்சுக்கொள். உன்னைப் பழி வாங்கணுங்கிறது என் எண்ணமல்ல! நீ திருந்தணுங்கறதுதான் என் ஆசை! உன்னைத் தலைவரு சொல்லி ஊருக்கெல்லாம் அறிமுகப்படுத்திவச்சேன்! உன்னை யாராவது தாக்கிப் பேசினா... நான் கேடயமா இருந்து அதைத் தடுத்தேன்! நீ தடம் புரண்டு போறேன்னு தெரிஞ்சதும், உன்னை நேர் வழிப்படுத்த எவ்வளவோ முயற்சி செஞ்சேன்! முடியலே! என்னைக் குப்பை மேட்டுல கொண்டு போய்ச் சேர்க்கிறதா நினைச்சுக்கிட்டு வேகமா நடந்தே! மோன இடத்துல நீ விழுந்துட்டே. நான்வரவேண்டிய இடத்துக்கு வந்துட்டேன்!

(ஆலால சுந்தரர், பார்வதி, லலிதா, பொன்னையன், சொர்ணம், சில தொழிலாளர்கள் முதலியோர் வருகின்றனர்)

ஆலால:- (பார்த்திபனைப் பார்த்து) பாவி! என்னையும் தொழிலாளிங்களையும் ஒற்றுமையா இருக்க விடமாட்டேன்னுட்டியே!



பார்வதி: நீங்க ஒற்றுமையா இருந்தாதான் பொழப்பு எப்படி நடக்கும்? பார்த்திபா! ஒண்ணு நீ தொழிலாளிங்களுக்கிட்ட விசுவாசமா இருந்திருக்கணும். இல்லே முதலாளி கிட்டயாவது விசுவாசமாய் இருந்திருக்கணும்! ரெண்டு சாரரையும் ஏமாத்த நினைச்சே. முடிவு என்னாச்சு? பார்த்தியா? முதலாளி, தொழிலாளிங்களைத் தன்னோட சொந்தப் பிள்ளைகளா நினைக்கணும்... தொழிலாளிகளும் முதலாளிகிட்ட உண்மையா நடந்துக்கணும்! உரிமையையும் கேக்கணும்! அதேசமயத்துல கடமையையும் செய்யணும்! தொழிலாளிங்க எண்ணத்தைப் பிரதிபலிக்கக் கட்டாயம் ஒரு சங்கம் வேணும். ஆனா அதன் தலைவர் பார்த்திபனைப்போல இருக்கக் கூடாது! முதலாளிக்கும் தொழிலாளிக்கும் பாலமா இருக்கவேண்டிய தலைவர் பாவமா மாறக் கூடாது! இந்த மாதிரி போலித் தலைவர்களால் உண்மையான தலைவர்களுக்கெல்லாம் கூட கெட்ட பெயர் தான் ஏற்படும்!

(பார்த்திபனைப் போலீசார் இழுத்துச் செல்கின்றனர்)

ஆலால: பார்வதி! இன்னியிலேயிருந்து நீயும் எனக்கொரு மகள் தான்! உன் தங்கச்சி லலிதா - கல்யாணமே வேண்டாம்னு சொல்லிட்டுச்சி! உனக்கும் குமாருக்கும் சீக்கிரத்துலே கல்யாணம் செஞ்சு வச்சுப் பார்க்கணும்னு ஆசைப்படறேன்... என்ன சொல்றே?

பார்வதி: பெரியவங்க பார்த்து முடிவு செஞ்சா சரி!

ஆலால:- அப்பாடா, தலை நரைச்சதிலேயிருந்து வருஷமாவது... ஆனா, தரமுள்ள வங்கவாயால பெரியவங்கற பேரை இப்பத்தான் வாங்கியிருக்கேன்! என் மனசு இப்ப எவ்வளவு சந்தோசமா இருக்கு தெரியுமா?

பொன்:- என் மனசுல கூட ஏகப்பட்ட சந்தோஷம் முதலாளி! (சொர்ணத்தைத் தொட, அவள் சிணுங்குகிறாள்.)

பார்வதி:- உங்க மனசு மட்டும் இல்லீங்க...! எல்லார் மனசுமே இப்ப நிறைஞ்சு இருக்கு!

(திரை)

முற்றும்

**நடிக்கும் கலைஞர்கள்**

கரிகோல்ராஜ் - ஆலாலசுந்தரர்
திருமுருகன் - குமார்
ஒருவிரல் கிருஷ்ணராவ் - பார்த்திபன்
ஸ்ரீராம் - பொன்னையன்
விஜயலட்சுமி - பார்வதி
விஜயகீதா - லலிதா
கோகிலா - சொர்ணம்



---

: உருவகக்கதை :

# இதுதான் உலகம்

நாகை தருமன்



தலைவாழை இலை போட்டு பதினறு வகை காய்கறிகளையும் பரிமாறியிருந்தனர். இலையில் ஒரு பகுதியில் முக்கனிகள் இடம்பிடித்துக் கொண்டிருந்தன!

உண்பதற்கா...? காண்பதற்கா...? என்று திகைக்கும்படி அத்தனை வகைகள்!

அழகான அந்த மாளிகையின் வாயிலில் படகுகள் பல ஊர்ந்து வருவதுபோல் கார்கள் வந்து குலுங்கி நின்றன!

கார்களிலிருந்து 'பெரிய' மனிதர்கள் இறங்கியதும்... மீண்டும் ஒருமுறை கார் குலுங்கியது! மலைகள் அசைந்து வருவதுபோல் மனிதர்கள் மாளிகையின் உள்ளே நுழைந்தனர்!

நாற்காலிகள் வலுவானவை. ஆகையால் அவர்கள் அச்சமின்றி அமர்ந்தனர். 'கன' தனவான்களின் கைகள் இலைகளில் அங்குமிங்கும் அலைபாய்ந்தன. விருந்தில் மருந்துபோல் ஏதோ ஒன்றை வாயில் எடுத்துப்போட்டுக்கொண்டனர்,

உடம்பில் சர்க்கரையும், உப்பும், அதிகமாக இருந்ததால் உணவில் அவைகளை அவர்கள் சேர்த்துக் கொள்ளக் கூடாது. கொழுப்பு... வாயு உள்ள பண்டங்களைப் பார்ப்பதுகூட ஆகாது என்று டாக்டர்கள் உத்தரவிட்டிருந்தனர்!

அப்புறம் எப்படிச்சாப்பிட முடியும்?

நாய்க்குட்டியின் பிறந்த நாளைக் கோலாகலமாகக் கொண்டாட இந்த விருந்தை ஏற்பாடு செய்த பெரிய மனிதர் சமையல்காரர்களை அழைத்து...

''அவருக்கு அவியல்போடு... இவருக்குப் பொறியல்போடு...'' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

இருப்பவர்களுக்கே சட்டியில் உள்ளதையெல்லாம் வாரி வாரிக் கொட்டிக் கொண்டிருந்தனர் பணியாட்கள்.

''வேண்டாம்.....வேண்டாம்...'' என்று 'கனம்'கள் மறுத்துப்பார்த்தாலும் வற்புறுத்திக் கொட்டப்பட்டன!

எத்தனை வகைகள் இலையில் இருந்தனவோ... அதைவிட அதிகமான வியாதி வகைகள் 'கனம்'களின் உடம்பில்! ஆகையால் மகான்கள்போல் இலையில் கைகளால் ஒப்புக்குத் துழாவிவிட்டு அவர்கள் எழுந்துவிட்டனர்!

இலைகளையெல்லாம் எடுத்து வாரிக் கூடையில் சுமந்து சென்று பணியாட்கள் குப்பைத் தொட்டியில் கொட்டினர்!

இந்த விருந்து தெரிந்து அழைப்பு இல்லாமலே குப்பைத்தொட்டி 'டைனிங் டேபிள்' அருகே ஒரு கூட்டம் கூடியிருந்தது. அதில் நாலுகால் பிராணிகளும் இருந்தன!

சண்டையிட்டுக் கொண்டாலும் மகிழ்ச்சியோடு அத்தனை வகை உணவுப் பண்டங்களையும் ரசித்து ருசித்தது அவர்கள் தான்.

படகுக்கார்கள் குலுங்கியபடி மாளிகையை விட்டு வெளியே வரும்போது அதில் இருந்த 'கனம்'கள் குப்பைத் தொட்டியைச் சுற்றியுள்ள கூட்டத்தைப் பார்த்தனர்.

அவர்கள் உண்பது பார்ப்பதற்கு என்னவோபோல்தான்இருந்தது! இருந்த இடம்... அவர்கள் கோலம் அப்படி! ஆனாலும் அவர்களால் 'நோய்' பயமின்றி உண்ண முடிந்தது!

மாளிகையில்.. அலங்கார டைனிங் டேபிளில்... ஆர்ப்பாட்டமாக அமர்ந்திருக்கும் பெரிய மனிதர்களால் பசியார ஆசைதீர உண்ண முடிந்ததா?

சமையல் செய்தவர்களும், மாளிகையின் பணியாட்களும் உள்ளே கூட்டமாக நின்று கொண்டிருந்தனர்.

மாளிகையின் உரிமையாளர் ''என்ன உங்களுக்கெல்லாம் சாப்பாடு... இருக்கிறதல்லவா...?'' என்று கேட்டார்!

''இல்லைங்க... எல்லாம் ஆகிவிட்டது...'' காலியான பாத்திரங்களைப் பார்த்தபடி சமையல்காரர் கூறினர்.

''ஹூம்..சரி சாதம் வடிச்சு ரசம் வைத்துப் போட்டுச் சாப்பிடுங்க...'' என்று சொல்லிவிட்டு அவர் மெல்ல மாடிக்குச் சென்றார். பிறந்தநாள் விழாவைக் கோலாகலமாக நடத்திவிட்டோம் என்ற மகிழ்ச்சியோடு!

பதினறு வகைக் காய்கறிகள், பல சுவையான உணவுப் பொருள்களைசமைத்துக் கொடுத்த சமையல்காரர் புன்னகை மாறுமல் உள்ளே சென்றார்.

அவருக்குத் தெரியும்- சமைக்கின்றவர்களில் பெரும்பாலோர் அரைப்பட்டினியாகத்தான் இருக்க வேண்டும் என்று!

பணியாட்களும், விருந்து பரிமாறியவர்களும் காலிப்பாத்திரங்களைப் பார்த்தபடி பெருமூச்சு விட்டனர்!

அவர்களால் குப்பைத் தொட்டிக்குச் சென்று உண்ணவும் முடியாது- சமையல்காரரைப்போல் மனதைச் சமாதானப்படுத்திக் கொள்ளவும் முடியாது!

பெருமூச்சு விடத்தான் முடியும்!

---

# நாடக மேடையில் எனது அனுபவங்கள்

எஸ். வி சேகர்

நாடக மேடையில் நான் நடிக்க வந்ததே ஒரு இனிய அனுபவம்!

கோபி (வி-கோபால கிருஷ்ணன்) குழுவினர் 'ராஜ யோகம்' என்ற நாடகத்தை நடத்த பெங்களூர் சென்றனர். நானும் அவர்களுடன் சென்றிருந்தேன்.

அந்த நாடகத்தில் தரகர் வேடத்தில் நடிக்க வேண்டியவர் வரவில்லை, நாடகம்துவங்கும்வரையில் அவருக்காக எதிர்பார்த்த கோபி வேறு வழியின்றி அந்த வேடத்தில் வேறு யாரையாவது நடிக்க வைத்துத் திரவேண்டும் என்ற நிலையில் நான் அவரது கண்களில் பட்டேன்.

''இன்று நாடகத்தில் நீதான் தரகர்..'' என்றார் கோபி.

''எனக்கு நடித்துப் பழக்கமில்லையே'' என்றேன் நான்.

''பரவாயில்லை ..உனக்கு நாடக வசனங்கள் நன்றாகத் தெரியும். தைரியமாகப் போ.... சமாளித்துக் கொள்ளலாம்'' என்று சொல்லி என்னைத் தள்ளிவிட்டார்.

மேடைக்குச் சென்ற நான்எப்படியோ சமாளித்துக் கொண்டு உள்ளே திரும்பி வந்தேன். இப்படித்தான் நாடக யோகம் 'ராஜ யோகம்' நாடகத்தின்மூலம் கோபியின்மூலம் அடித்தது.

கோபி குழுவினர் சிங்கப்பூரில் நாடகங்கள் நடத்த சென்றிருந்தனர். நானும் அவர்களுடன் சென்றேன்.

'கிரகப்பிரவேசம்' என்ற நாடகத்தில் கோபியின் மனைவியும் நடிப்பார். தோழி ஒருவரைக்காண சென்றிருந்த கோபியின் மனைவி போக்குவரத்து நெரிசல்காரணமாக வருவதற்குத் தாமதமாகிவிட்டது.

நாடகம் துவங்கும் நேரமோநெருங்கிவிட்டது.

(2-ம் பக்கம்பார்க்க)

---



# கல்லும் மலரும்

அ.பொ.நாராயணன்

மெல்லக் கண் சாய்ந்து கிடந்தான்! போதையின் உக்கிரமம் கண் இமைகளை மூட வைத்தாலும், உள்ளம் மட்டிலும் வெறித்துப் பார்த்தபடியே குதித் நின்றது.

இன்னும் 6 பேரை எப்படித்தீர்ப்பது? முதலில் செங்கோடன் மீதே வெறித்தனம் பதிந்தது.

மாலை வரவும்- போதை அடங்கவும் சரியாக இருந்தது. குளிர்ந்த சுனை நீரில் கை-கால் முகம் அலம்பிக் கொண்டான்.

மேச்சேரி பக்கம் அன்றிரவு ஒரு திருவிழா.

குறி வைத்துக் கொண்டிருக்கும் நபர்களில் ஒருவனாவது சிக்கமாட்டானு என்ற நப்பாசையில் எழுந்தான்.

மலை உச்சியிலிருந்து கீழே அவனது பார்வை விழுந்தது. பொன்னிற மாலைக் கதிரில், மலைக்கு வரும் ஒற்றையடித்தடம் இரை எடுத்த மலைப்பாம்புபோல் வளைந்து நெளிந்து கிடந்தது.

புதருக்குள் வைத்திருந்த வேட்டிசட்டைகளை எடுத்து அணிந்திருந்த காக்கிஉடைகளைமாற்றிக்கொண்டான். பல வாரத்துக்குப் பிறகு முதல்முறையாகத்தலையை வாரிக்கொண்டு அசப்பில் ஒரு அப்பாவிமாதிரிதன்னை உருவகப்படுத்திக்கொண்டு ஒற்றையடிப்பாதையில் நடந்தான்.

''செங்கோடன் சிக்கினால்...''- அவனது எண்ணமெல்லாம் வெறியேறியபடி இடுப்பில் மறைத்து வைத்திருந்த கத்தியைத் தடவிக் கொண்டே நடந்தான்.

தாரமங்கலம் பக்கம் வந்துவிட்டான்.

வையாபுரியைப் பிடிக்க அனுப்பப்பட்டுள்ள தனி போலீஸ் படை அந்த வட்டாரம்முழுவதும் நடமாடிக்கொண்டிருப்பது அவனுக்குப் புதிய சங்கதி அல்ல.

பரட்டைத் தலையுடன் காக்கி உடை அணிந்து பயங்கரமாக இருப்பான் என்ற போலீஸ்காரர்களின் எதிர்பார்ப்புக்கு ஏமாற்றத்தை அளித்து தப்பித்துக் கொள்ள வெள்ளை உடையும் வாரிய தலையும் வையாபுரிக்கு மேக்-அப் ஆகும்!

மேச்சேரி ரோட்டில் கடை வீதியை ஒட்டினாற்போல் உள்ள பகுதியில் வேகமாக நடந்து கொண்டிருந்தான், வையாபுரி.

''யோவ் ..''

''வெள்ளைச் சட்டை ...உன்னைத்தான்... நில்லய்யா...''

குரல் வந்த பின்பக்கம் திரும்பிப்பார்த்தான்.

போலீஸ் வேன் அருகில் 3 கான்ஸ்டபிள்கள் நின்று கொண்டிருந்தனர்.

ஒன்றும் புரியவில்லை வையாபுரிக்கு. திட்டத்தை நிறைவேற்றுமுன் பிடிபட்டு கொள்வோமோ?

-அவன் மனம் சற்று அலைக்கழிந்தது.

ஓடுவதா? நிற்பதா?

-சரி எதற்கும் போய்ப் பார்ப்போம் என்று ஒரு தீர்மானத்துக்கு வந்து கான்ஸ்டபிள்கள் பக்கம் சென்றான்.

''இன்னய்யா அப்படி விசுக்விசுக்குன்னு போறே? ...ஊம்.,. வாய ஊது''

போலீஸ்காரர்கள் உத்தரவுப்படி வெற்றிலை புகையிலை குதப்பிய வையாபுரி ஊதினான்.

''சனியன்...சனியன்...போயில... மொடா நாத்தம்...போய்த்தொல...''

போலீசார் அனுமதி கொடுத்தார்கள், மதுவிலக்கு வேட்டை நடத்தும் ''மொபைல்'' பார்ட்டியிடம் இருந்து தப்பிய திருப்தியுடன்திருவிழா நடக்கும் இடத்துக்குப் புறப்பட்டான்.

★ ★ ★

மாரியம்மனுக்கு ஒரு பக்கம் பொங்கல் படையலும் மறு பக்கம் ஆடு அறுப்பு வைபவமும் நடந்துகொண்டிருந்தன. கும்ப ஆட்டம் வேறு.

நெடுநாளாகதனிமையில் வாழ்ந்த அவனுக்கு ஜன சந்தடி மத்தியில் நிற்பதில் ஒரு லயிப்பு!

யாரும் அடையாளம் பார்த்துவிடாதபடி கூட்டத்துக்குள் நின்று கரக ஆட்டம் வேடிக்கை பார்த்தான்,

வேடிக்கை பார்த்த பெண்கள் பகுதிக்குள் ஒரு பெண்வாட்டசாட்டமான வையாபுரியை மெல்ல நோட்டம் விட்டாள்.

உற்றுப்பார்த்தான். பதிலுக்குப் புன்னகைத்தான். மீசையை நீவி விட்டபடி, இதழ்களைப் பல்லால் மெல்லக்கடித்தான்.

- அப்படி அவன்பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கும்போது அவள் மட்டுமல்ல, இதுவரை தேடிக் கொண்டிருக்கும் செங்கோடன் அவளுக்குப்பின்னால்சற்றுத் தொலைவில் நிற்பது தெரிந்தது.

உள்ளத்தில் துளிர்த்த காதல்உணர்வு மறைந்தது கும்பலுக்குள் வைத்தே அவன் உடலுக்குள் கத்தியைப்பாய்ச்சி விட்டு நழுவிக் கொண்டால்... வையாபுரி திட்டமிட்டான்.

பரபரப்பின்றி செயல் படச்சித்தமானான்.

எப்படியோ செங்கோடனின் பார்வை வையாபுரி மீதுவிழுந்துவிட்டது. சற்று தூரத்தில் காட்டுக்குள் அமர்ந்திருக்கும் தனி போலீஸ் படையிடம் வையாபுரி வந்திருப்பதை சொல்ல செங்கோடன் கூட்டத்திலிருந்து நழுவினான்.

தன்னையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தவளை நோக்கி ஒரு புன் முறுவலை வீசி விட்டு-செங்கோடனைத் தொடர்ந்தான்வையாபுரி.

கரக ஆட்டம் நடந்த இடத்துக்கு அப்பால் 'கும்' இருட்டு.

எங்கும் நிறைந்திருந்தது, மேள தாள ஓசை.

பரபரப்பும் சந்தடியுமாக இருந்த அந்த ஊருக்குள் செங்கோடனை துரத்திக்கொண்டு வையாபுரி ஓடியது யாருக்கும் ஒரு பரபரப்பான விஷயமில்லை.

ஊரைத் தாண்டிசென்றபோது செங்கோடன் பிடிபட்டான்.

திருவிழா கேளிக்கை ஓசைகள். ஒலிபெருக்கி முழக்கங்களுக்கிடையே செங்கோடன் வயிற்றில் கத்தியைச் செருகினான் வையாபுரி! கூக்குரல் ஓலம் எதுவும் வெளியே பரவ

(2-ம் பக்கம் பார்க்க)